# நவயுக வாசகம்



முதற் படிவம்—சிறப்பு




இராவ்சாகிப், கு. அருணாசலக் கவுண்டர்,
பேராசிரியர்
ம. தி தா. இந்து காலேஜ், திருநெல்வேலி.



...பிரமணிய பிள்ளை, திருநெல்வேலி

# நவயுக வாசகம்

## முதல் படிவம்—சிறப்பு





இராவ்சாகிப், கு. அருணாசலக் கவுண்டர்
ம. தி. தா. இந்து காலேஜ், திருநெல்வேலி.






எஸ். ஆர். சுப்பிரமணிய பிள்ளை
பப்ளிஷர்ஸ் : : திருநெல்வேலி


 [விலை அணா 8

# முன்னுரை

'கல்வி பயிலும் சிறுர்க்குத் தமிழ் இலக்கியத்தில், அதன் செய்யுள் நடை உரை நடைகளைக் கற்பதிலே பேரவாவும் பெரு மகிழ்ச்சியும் ஏற்படவேண்டும்' என்ற இலட்சியத்திலே புதிய பாடத்திட்டத்தை ஒட்டி இந்த வாசக புத்தகங்கள் எழுதப்பட்டன. இவற்றைப் படிக்க நேர்ந்த நீதிபதி மா. அனந்தநாராயணன் அவர்கள், எம். ஏ. (காண்டப்) ஐ. சி. எஸ். பின்வருமாறு எழுதுகிறுர்கள் :

'இங்கே செய்யுள் பகுதிகளிலுள்ள தனிப்பாடல்களையும் சைவ வைணவப் பெரியாரின் துதிகளையும் விலையற்ற ரத்தினங்களாக நாம் மதிக்கவேண்டும். தமிழில் செய்யுட் பாடங்களை என்றும் இசையுடன் பயிலவேண்டும்.

'இங்குள்ள வசன நடைப் பாடங்கள், நமது சிறுவர் சிறுமியரின் உள்ள இயல்புகளையும், தமிழ் நாட்டின் தனி மரபையும் நோக்கத்தில் கொண்டு, செவ்வனே இயற்றப் பெற்றன.

'பெரியவர் கூட, முன்னறியாத சில அருமையான செய்திகளை இந்த வாசக புத்தகங்களிலிருந்து அறிந்துகொள்ளக் கூடும்.'

கு. அருணசலன்

# பொருளடக்கம்

## செய்யுள்



## உரைநடை

# நவயுக வாசகம்

## முதற் படிவம்—சிறப்பு



## 1. வாழ்த்து

### கலை மகள்

படிக நிறமும் பவளச் செவ்வாயும்
கடிகமழ் பூந் தாமரை போல் கையும்—துடிஇடையும்
அல்லும் பகலும் அனவரத மும் துதித்தால்
கல்லும் சொல் லாதோ கவி.

—கம்பர்

### வந்து காணீர் !

சீதக் கடலுள் அமுதன்ன தேவகி
கோதைக் குழலாள் அசோதைக்குப் போத்தந்த
பேதைக் குழவி, பிடித்துச் சுவைத் துண்ணும்
பாதக் கமலங்கள் காணீரே ;
பவள வாயீர் ! வந்து காணீரே.

மைத்தடங் கண்ணி யசோதை வளர்க்கின்ற
செய்த்தலை நீல நிறத்துச் சிறுபிள்ளை
நெய்த்தலை நேமியும் சங்கும் நிலாவிய
கைத்தலங் கள் வந்து காணீரே ;
காரிகை யீர் ! வந்து காணீரே.

நோக்கி யசோதை நுணுக்கிய மஞ்சளால்
நாக்கு வழித்துநீ ராட்டும் இந் நம்பிக்கு
வாக்கும் நயனமும் வாயும் முறுவலும்
மூக்கும் இருந்தவா காணீரே ;
மொய் குழ லீர் ! வந்து காணீரே.

—பெரியாழ்வார்

# 2. வருணனை

## அந்தி வானம்

பார் ! சுடர்ப் பரிதியைச் சூழவே படர்முகில்
எத்தனை தீப்பட் டெரிவன ! ஓகோ !
என்னடீ ! இந்த வன்னத் தியல்புகள் !
எத்தனை வடிவம் ! எத்தனை கலவை !
தீயின் குழம்புகள் !—செழும்பொன் காய்ச்சி
விட்ட ஓடைகள் !—வெம்மை தோன் றுமே
எரிந்திடுந் தங்கத் தீவுகள் !—பாரடி !
நீலப் பொய்கைகள் !—அடடா, நீல
வன்னம் ஒன்றில் எத்தனை வகையடீ !
எத்தனை செம்மை ! பசுமையுங் கருமையும்
எத்தனை !—கரிய பெரும் பெரும் பூதம் !
நீலப் பொய்கையின் மிதந்திடுந் தங்கத்
தோணிகள் !—சுடரொளிப் பொற்கரை இட்ட
கருஞ் சிகரங்கள் !—காணடி ! ஆங்கு
தங்கத் திமிங்கிலம் தாம்பல மிதக்கும்
இருட்கடல் !—ஆகா ! எங்கு நோக் கிடினும்
ஒளித்திரள் ! ஒளித்திரள் ! வன்னக் களஞ்சியம் !

—பாரதியார்

# 3. தனிப்பாடல்

### சண்டிக் காளை

இட்டமுடன் முதலியார் வாங்கி வந்த காளை, தினம்
இருபோர் தின்னும்;
சட்டமுடன் கொள்ளுண்ணும்; புல்லுண்ணும்;
அதைப் பண்டி தன்னிற் பூட்டக்
கிட்ட வரின், முட்டவரும்; தொட்டவர் மேலே கழியும்;
கீழே விழும்;
எட்டாள்கள் தூக்கிடினும் தடிகொண்டு தாக்கிடினும்
எழுந்தி ராதே.

—மாயூரம் வேதநாயகம்

### ஔவை ஆடு கேட்டது

வாதவர்கோன் பின்னை என்றான்; வத்தவர்கோன்
நாளை என்றான்
யாதவர்கோன் யாதொன்றும் இல்லைஎன்றான்;
ஆதலால்
வாதவர்கோன் பின்னையினும், வத்தவர்கோன் நாளை
யினும்
யாதவர்கோன் இல்லை இனிது.

### ஔவை பூதனைப் போற்றியது

வரகரிசிச் சோறும் வழுதுணங்காய் வாட்டும்
முரமுரஎன் றேபுளித்த மோரும்—பரிவுடனே
புல்வேளூர்ப் பூதன் புகழ்புரிந் திட்டசோறு
எல்லா உலகும் பெறும்.

### சத்திரத்துச் சாப்பாட்டைக் காளமேகம் இகழ்ந்தது

கத்துகடல் சூழ்நாகைக் காத்தான்தன் சத்திரத்தில்
அத்தமிக்கும் போதில் அரிசிவரும்—குத்தி
உலையிலிட ஊரடங்கும்; ஓரகப்பை அன்னம்
இலையிலிட வெள்ளி எழும்.

# 4. கதை

## கெடுவான் கேடு நினைப்பான்

வளமுறு மகத நாட்டில்,
சண்பக வனத்தில் மன்னி,
உளமகிழ் கொடியும், மானும்
உறவு கொண் டிருக்கும் காலைக்—
கொளும் இளம் புல்லால் மான் மெய்
கொழுத்திடும் இயல்பு நோக்கிக்
களமிகு நரி யொன் றுள்ளக்
கபடத்தாற் கொல்ல எண்ணி,

துன்னிய மான்பாற் சென்(று) 'என்
நண்ப ! நீ சுகமே ?' என்ன
அன்னதைக் கேட்டு, 'நீ யார் ?'
என்றலும், 'அறியோய் ! யான் இக்
கொன்னுறு வனத்தில் வாழ்வேன் ;
குத்திர புத்தி என் பேர் ;
பன்னிய கிளையொன் றில்லாப்
பாவியாய்த் திரிந்து நின்றேன்.

'இன்றுனைக் கண்டு நெஞ்சத்
தெய்தினேன் உவகை ; இப்போ(து)
உன்றிருப் பணி செய்(து) உன்பால்
உற்றிட விழைந்தேன் ?' என்ன ;—
நன்றென இசைந் திரண்டும்
நண்ணு சண்பகத்தின் கீழே
துன்றின ; அதன்மேல் உற்ற
சுபுத்தியாம் காகம் கண்டே,

'மித்திர மானே! நின்பால்,
மேவினுன் யாவன்?' என்னப்;—
'பத்தியிற் சிநேகஞ் செய்யப்
படர்ந்த சம்புகன்' என்றேத;—
'அத்தகை யான்றன் செய்கை
குலத் தொடும் ஆரா யாமல்,
மத்திய திடம் நாம் ஈகை
தகாதது வழங்கல் செய்தால்'

என்னலும், அந்நரி அது கேட்(டு)
'இவற்குநீ! நட்புச் செய்யும்
முன்னமே நின் இயல்பு
தெரியுமோ? மொழிதி!' என்னப்,—
பின்னர் மான் காகத்தின்
மனம் ஒருமை பெறப் புரியத்
துன்னிய இம் மூன்றும் அருந்
தொடர்பு கொடு நின் றனவே.

ஆய தினந்தனில், ஒரு நாள்
மானைப் பார்த்(து) அந்த நரி
'மேயும் இளம் பயிர் உனக்கு
வேண்டு மட்டும் அருந்துமிடம்
நீ அறிதி!' எனக்காட்ட,
அன்று முதல் நெடிய மான்
போய், அதனை மேய்ந்து, பசி
போக்கி இருந்திட் டதுவே.

பயிரிட்டோன், இது கண்டு
வலை கட்டப், பாராது
செயிர் இட்ட மான் வழக்கப்
படி சென்று சிக்குண்(டு) 'என்

உயிரிட்ட நண்பன் அலா(து)
　　உயச் செய்வார் யார் ?' என்று,
தயிரிட்டமத் தென்னத்
　　தனது மனம் சுழல் காலை,

வன்பினெடு நரி கண்(டு), ' இன்று
　　எண்ணம் எல்லாம் வாய்த்ததினித்
துன்பற இன்(று) இதன் எலும்பைத்
　　தசை யினெடு சுவைத் துண்டே
இன்பி னெடும் உறலாம் ' என்(று)
　　எண்ணி வாளா திருப்ப—
அன்று றுமான் கண்(டு) ' இங்கென்
　　தலை விடுவி !' என அறைய,

நரியது கேட்(டு) ' இன்றைக்கோர்
　　விரத தினம் ; நாளை எனில்
பரிகரிப்பன் நினது தலை
　　பகர் தரு தோல் ஆதலினுல் ;
பிரியம் உறு நட்பினர்க் கென்
　　பிராணனையும் விடவல்லேன் ;
தெரிகிலையோ நீ !' என்றுரர்
　　செடியின் மறைந் திருந்ததுவே.

காகமது மித்திரனைக்
　　காணுமல், அன்றிரவு
சோகமுற் றெங்கணுந் தேடித்
　　தோல் வலையிற் பட்டதறிந்(து),
' ஊக முடை மானே ! இங்(கு)
　　உற்றுழல்வ(து) என் ?' எனலும்,
' நீகழ(று) உரை கேளாமையின்
　　வந்த நிலை இதுவே ', என்ன,—

‘ நண்பு கொண்ட நரி எங்கே ?’
  என, ‘ எனது நல்லிறைச்சி
உண்பதற்கோர் செடியின் கீழ்
  ஒளித்திருந்தது ’ எனப் புகல,—
பண்புறு காகம் கேட்டுப்
  ‘ பயிர்க் கதிபன் உறுகின்ருன் ;
மண்படும் ஆருயிர் கழிந்த
  வடிவம் போல் உறு(க),’ எனலும்,

நண்ணிய அப்பயிர்க் கதிபன்,
  உயிர் கழிந்த நௌவிஎன,
எண்ணி இதை இழுத் தங்கு
  வலை கட்டும் எல்லை யினில்,
மண்ணின் விரைந் தோடுதலும்,
  தண்டம் அவன் வலிந் தெறியத்
திண்ணிய தோர் செடியின் கீழ்
  இருந்த நரி சிதைந் ததுவே.

—வீரமார்த்தாண்டத் தேவர்

# 5. அறநெறி

## துர்ச்சனர்

ஈக்கு விடம் தலையில் எய்தும் ; இரும் தேளுக்கு
வாய்த்த விடம் கொடுக்கில் வாழுமே ;—நோக்கரிய
பைங்கண் அர வுக்கு விடம் பல்லளவே ; துர்ச்சனருக்கு,
அங்கம்முழு தும் விடமே ஆம்.

துர்ச்சனரும் பாம்பும் துலையொக் கினும், பாம்பு
துர்ச்சனரை ஒக்குமோ தோகையே—துர்ச்சனர் தாம்
எந்தவிதத் தாலும் இணங்காரே ; பாம்பு மணி
மந்திரத்தால் ஆகுமே வசம்.

கொம்(பு) உளதற்(கு) ஐந்து ; குதிரைக்குப் பத்துமுழம்
வெம்புகரிக்கு ஆயிரம்தான் வேண்டுமே—வம்புசெறி
தீங்கினர்தம் கண்ணில் தெரியாத தூரத்தே
நீங்குவதே நல்ல நெறி.

—நீதிவெண்பா

## வயிற்றுப் பிழைப்பு

சேவித்தும்,சென்றிரந்தும்,தெண்ணீர்க் கடல்கடந்தும்
பாவித்தும்,பாராண்டும்,பாட்டிசைத்தும்,–போவிப்பம்
பாழின் உடம்பை ; வயிற்றின் கொடுமையால்,
நாழி அரிசிக்கே நாம்.

பிச்சைக்கு மூத்த குடிவாழ்க்கை, பேசுங்கால்
இச்சைபல சொல்லி இடித்துண்கை ;—சிச்சீ
வயிறு வளர்க்கைக்கு மானம் அழியாது
உயிர் விடுகை சால உறும்.

—நல்வழி

# ஏசுநாதர்

'கிறிஸ்து' என்றோ, 'ஏசு' என்றோ, 'ஏசு கிறிஸ்து' என்றோ வழங்கப்படுகின்ற சமயாசாரியார் சரிதத்தை விவிலிய வேதத்தின் புதிய ஏற்பாட்டிலே காணலாம். அவருடைய வளர்ப்பு, கல்வி, வாலிபத்தைப் பற்றிய விவரம் தெரியவில்லை. பெத்தல்கேமிலே பிறந்தார்; நாசரத்திலே வளர்ந்தார்; கலிலேயாவிலே தமது கொள்கையைப் பிரசாரம் செய்யத் தொடங்கினார். அப்போது, அவருக்கு வயது சுமார் முப்பதிருக்கும். ஜெருசலத்திலே ரோம கவர்னர் பிலாத் என்பவரால் விசாரிக்கப்பட்டுத் தண்டிக்கப்பட்டார்.

## யூதரிடையே

ஏசுநாதர் ஒரு யூதர். யூதர்கள் பொறுமைசாலிகள்; புத்திசாலிகள். தாவிது, சாலமொன் ஆட்சிக் காலங்களிலே யூதர்கள் சிறிது காலம் கீர்த்தியுடன் திகழ்ந்தார்கள். பிற்காலங்களிலே அவர்கள் சொல்லொணுத் துயரங்களுக்கும் துன்பங்களுக்கும் ஆளானார்கள். நல்வாழ்வுக்கு நாடின்றிப் போவதற்குப் புகலின்றி, இரண்டாயிரம் ஆண்டுகளாகவே அலைந்து அவதிப்பட்டு, சிறைவாசம் சிரச்சேதங்களுக்கு ஆளாகியும், தங்கள் தனிப்பண்பை இழவாமல் நெடுங்காலம் தாக்கு பிடித்து, தரணி எங்கும் வாழ்கின்ற யூதர் கூட்டம் சரித்திர வியப்பே. சாலமொன் காலத்திய புகழும் பொலிவும் தங்கள் சாதியிலே மீண்டும் மலரும் காலங்கருதி அவர்கள் அடங்கி வாழ்ந்தனர். சோர்ந்து போனாலும் தங்கள்

நடுவே 'மெசையா' தோன்றித் தங்களைக் கைதூக்கி விடுவார் என்று அவர்கள் நம்பி இருந்தார்கள். ஏசு நாதரைத் தாங்கள் எதிர்பார்த்த 'மெசையா' என்று அவர்கள் முதலிலே எண்ணியிருக்கக் கூடும். ஆனால் விரைவிலே அவ்வெண்ணத்தை மாற்றிக் கொண்டனர்.

அவர்கள் பழக்க வழக்கங்களிலே சமூகக் கட்டுப் பாடு ஒழுங்குகளிலே பொதிந்து கிடக்கும் உண் மைப் பொருள்களை ஏசுநாதர் புலப்படுத்தினர். யூதத் தலைவர்கள் இதனால் திடுக்கிட்டனர். சமயத்தை வெறும் சடங்காசாரமாகக் கொண்ட வேடதாரி களுக்கு ஏசுநாதர் பெரிய விரோதி. படாடோபமான பணக்காரர்களைக் குறித்து அவர் அங்கலாய்த்தார். செல்வமும் சிறப்பும் தேடித் தருவதாக அவர் உறுதி கூறவில்லை. அதற்கு மாருக மண்ணுலகிலே கடவுள் ராச்சியத்தை அமைக்கக் கருதினர்; அதன் நிமித்தம் கையில் உள்ளதையும், துறந்துவிடத் தூண்டினர். கதைகள் மூலம் தம் கருத்துக்களை வெளியிட்டார்; உவமைகளால் விளக்கினர்; கிளர்ச்சி வீரராய்ப் புலப்பட்டார். யூதர்கள் விரும்பியது இது அன்று. அவர்கள் எதிர்பார்த்தது ரோமராச்சியத்தினின்றும் தங்களை மீட்கவல்ல ஒரு சாதியத் தலைவனை. ஆனால் அவர்கள் ஏமாறினர்; ஆதலின் ஏசுவை வெறுத்தார் கள். ரோம அதிகாரியிடம் ராசத் துரோகியாக ஏசு ஒப்புவிக்கப்பட்டார். ரோமர் கடவுளைப்பற்றிக் கவலைப் படுபவர் அல்லர். ரோம கவர்னர் பிலாத் ஏசுநாதரின் சமயப் பிரசாரத்தைக் குறித்துக் கவலை கொண்டிருக்க மாட்டார். ஆனால், யூதருக்கும் ரோம வேந்தனுக் கும் அஞ்சி ஏசுவை ஓர் அரசியல் விரோதியாக அவர் தீர்ப்புக் கூறினர். இனத்தாராலேயே குற்றம் சாட்

டப்பெற்ற ஏசுவுக்குத் தண்டனை சிலுவையே; இது பிலாத்துவின் தீர்ப்பு.

**சிலுவையிலே**

சிலுவையிலே ஏசுநாதர் அறையப்பட்டார். அப்போதும் அவர், 'இன்னது என அறிகிலார் தாம் செய்வது: இவர் பிழையை மன்னியும்' என்று இறைவனை வேண்டினர். மரண வேதனையில் 'கடவுளே! கடவுளே! என்னை ஏன் கைவிட்டாய்' என்று தொடங்கும் வீர சங்கீதத்தை வாய்க்குள்ளே பாடினர். தெரிந்தெடுத்த சீடர்களே மறுதலித்தார்கள். அவர்களிலே ஒருவன் துரோகியாகவும் மாறினன். கிறிஸ்தவ சமயம் வளர்ந்த பிற்காலத்திலே உலகம் எங்கும் கோடானுகோடி மக்களுக்கு ஏசு நாமம் செபத்துக்கும் தியானத்துக்கும் உரிய மந்திர மொழியாயிற்று. ஆனல் சிலுவையிலே இடப்பட்ட போது, அவர் பாலஸ்தீனத்துக்கு வெளியே அறியப்படவில்லை.

**சமய வளர்ச்சி**

ஏசுநாதர் தத்துவம் எப்படிப் பரவியது? யூதர் நடுவே அவருடைய பிரதம சீடர்களிலே சிலர் பிரசாரம் செய்து வந்தனர்; வேறு சிலர் அயல் நாடுகளிலே பிரசாரம் செய்தனர். அவர்களில் சிறந்தவர் பவுல். அவர் ஏசுநாதரைப் பார்த்ததேயில்லை; பாராதது மட்டுமன்று, வாலிப காலத்திலே அவர் கிறிஸ்தவரது பரம விரோதியாகவும் விளங்கினர். கிறிஸ்தவர்களைத் திரட்டி, சிறையிலிட ஒரு நாள் அவர் சென்றபோது, தென்பட்ட தெய்வக் காட்சியில், அவர் மனம் மாறினர்; கிறிஸ்தவரானர். அறிவாற்றல்

களிலே தேர்ந்த பவுல் கிறிஸ்தவ சமயத்தைப் பரப்பு வதிலே வெற்றிபெற்ருர். ஆதிக் கிறிஸ்தவர் மதப் பற்று மிகுந்தவர். தேவலோக சக்கரவர்த்தியாகிய கடவுளை அல்லாமல் பூலோக சக்கரவர்த்தி ஆகிய ரோம வேந்தர் உருவங்களை வழிபட அவர்கள் மறுத்



தார்கள். அது ராசத்துரோகமாகக் கருதப்பட்டது. அதனுல், ஆதிக் கிறிதவர்கள் சிறையில்டைக்கப்பட் டார்கள். சிங்கங்களின் முன் விடப்பட்டார்கள். இந்த ஆத்ம பரித் தியாகிகளைப் பற்றிய கதைகளை நீங்கள் அறிவீர்கள். கொள்கைக்காக ஒருவன் தன்னைப் பலியிடத் துணியும்போது, அவனை அல் லது அவன் மேற்கொண்ட கொள்கையை அடக்க யாராலும் முடியாது. கிறிஸ்தவம் கிளர்ந்தெழுந்தது. கி. பி. நாலாம் நூற்ருண்டிலே ரோம வேந்தன் ஒரு வன் கிறிஸ்தவ சமயத்தைத் தழுவினுன். அதனுல் அது ரோம சாம்ராச்சியத்தின் அரசாங்க மதமாக

மலர்ந்தது. நாளடைவில் அது உலக மதமாய் உயர்ந்தது.

## அறிவுரை

ஏசுநாதர் ஏன் அவதரித்தார்? அவர் அறிவுறுத்தியது என்ன? கடவுளே பிதா; மானிடரெல்லாம் சகோதரர் என்று காண்பிப்பதற்கே அவர் அவதரித்தார். அன்புடன் பணி செய்வதற்கே நாம் பிறருடன் பழகவேண்டும் என்று போதித்தார். சரீரத்தை மாத்திரம் வதைக்கக் கூடிய பகைவர்க்கு நாம் பயப்பட வேண்டியதில்லை; பலனை இச்சிக்காமல், பிதாவின் கட்டளையை நிறைவேற்றி, நமது கடமைகளைச் செய்யவேண்டும் என்பதை அவர் தமது வாழ்க்கையின் மூலம் காண்பித்தார்.

ஏசுநாதரை ஒரு சமயம் சாஸ்திரியார் ஒருவர் வேதத்தில் எந்தக் கற்பனை முக்கியமானது என்று கேட்டார். அதற்கு ஏசுநாதர், 'உன் ஆண்டவனாகிய கடவுளிடம் உன் முழு இதயத்தோடும் உன் முழு ஆன்மாவுடனும் உன் முழு மனத்துடனும் அன்பு கொள்ளவேண்டும்' என்றார். இதுவே முதன்மையான கற்பனை; அடுத்தது, 'உன்னிடத்தில் நீ அன்பு கூர்வது போல, உன் அயலாரிடத்திலும் நீ அன்பு கூர்தல் வேண்டும்' என்பதுவே. இதனால், அன்பின் மூலமும், நாம் பிறருக்குச் செய்யும் தொண்டின் மூலமும், கடவுளை வழிபட வேண்டும் என்பது தெரிகிறதல்லவா?

**1. சொல்லும் தொடரும் :**

| | | |
|---|---|---|
| சமயாசாரியார் | கோடானுகோடி | விவிலிய வேதம் |
| சடங்காசாரம் | குறிகிய நோக்கம் | ஆத்மபரித்தியாகி |
| சமய வெறியர் | கடவுள் ராச்சியம் | கடவுள் வழிபாடு |

2. சிந்தனைக்கு :

1. யூதர்கூட்டம் சரித்திர வியப்பே—ஏன் ?

2. தமிழ் நாட்டிலே கிறிஸ்தவம் பரவிய சரித்திரத்தை நீங்கள் அறிவீர்களா ?

3. சமயம் என்றால் என்ன ? அது, வாழ்க்கைக்கு அவசியமா ?

3. பயிற்சி :

| பிழை | திருத்தம் | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| சுவறு | சுவர் | கர்த்த | கருத்தா |
| ஊரு, குளிரு, | ஊர், குளிர் | காக்ஷி | காட்சி |
| யிருக்கிறான் | இருக்கிறான் | தின்மை | தீமை |
| வெட்க்கம் | வெட்கம் | தேழ்வை | தேவை |
| சூட்சி | சூழ்ச்சி | வேணும் | வேண்டும் |

1. படாடோபமான பணக்காரர்களைக் குறித்து அவர் அங்கலாய்த்தார்—அங்கலாய்த்தல் : இது பேச்சு வழக்கிலே பயில்வது. இச்சொல்லை வழங்கி ஒரு வாக்கியம் எழுது.

2. கண்முழி
ஒலக்கை
தாக்கோல்
பேத்தி —திருத்தி எழுது

அவசரம் அறியாமை காரணமாகப் பேச்சிலே சில சொற்களைச் சிதைத்தும் திரித்தும் வழங்குகின்றோம் ; இப்படி வழங்குவதை—கொச்சையைத் தவிர்ப்பது மிகவும் அவசியம்.

# திருமா பத்தினி

## புகாரிலே

சோணாட்டிலே, காவிரி கடலொடு கலக்கும் இடத்தமைந்தது புகார் என்ற காவிரிப்பூம் பட்டினம். இது சோழ வேந்தரது பழைய தலைநகரம்; துறைமுகம். இந்நகரிலே மாசாத்துவான் என்பவன் ஒரு வணிக மன்னன். அவன் தன் மகன் கோவலனுக்கு, மாநாய்கன் மகள் கண்ணகியை மணம் புரிவித்தான். கண்ணகியின் தந்தை ஒரு பெரிய கடல் வணிகன். மணவாளரான கண்ணகியும் கோவலனும் தனி மாளிகையிலே வாழ்ந்து வந்தனர்; அறவோர்க் களித்தனர்; அந்தணரை ஓம்பினர்; தான தருமங்களைப்புரிந்து இவர்கள் இனிதாக இல்லறத்தை நடத்திவரும்போது, கோவலன், அழகும் ஆடல்பாடல்களிலே தேர்ச்சியும் வாய்ந்த மாதவி என்னும் நடிகையைக் காதலித்தான். கண்ணகியை மறந்தான். தன் கைப்பொருளை நாளும் அவன் செலவிட்டான். கண்ணகியோ உத்தம மனைவி; கணவன் பிரிவுக்கு வருந்தினாள்; என்றாலும், வருத்தம் வெளித்தெரிவியாது ஒழுகினாள்.

ஆண்டு தோறும் வழக்கம் போல நடக்கும் இந்திரவிழா வந்தது. விழாவின் முடிவிலே, நகர மக்கள் தத்தம் பரிவாரங்களுடன் கடலாடுதற்குச் சென்றனர். கோவலனும், மாதவியும் கடற்கரை சென்று, ஓரிடத்தமர்ந்து, பாடல்களைப் பாடியும் யாழை வாசித்தும் பொழுது போக்கினார்கள். அப்போது, தப்பெண்ணத்தால் அவர்களிடையே மனத்தாங்கல் ஏற்பட்டது. கோவலன், மனம் வேறுபட்டு,

மாதவியைத் துறந்து தன்மனையை அடைந்தான். கண்ணகியைக் கண்டு அவள் முன், தன் தகாத நடத்தையை நினைந்து நாணி நின்றான். மாதவிக்குக் கொடுக்கக் கையிலே பொருளின்றிக் கணவன் கவல்கின்றான் என்று கருதிய கண்ணகி, ‘என்னுடைய இந்த இரண்டு சிலம்புகளையும் ஏற்றருள்க’ என்றாள். அதற்குக் கோவலன், ‘மதுரைக்குச் சென்று சிலம்புகளை விற்று, வணிகம் செய்ய விரும்புகின்றேன்; நீயும் உடன் வருக’ என்று, கண்ணகியை அழைத்துக்கொண்டு, அந்த ராத்திரி கடையாமத்தே யாரும் அறியாவகை புறப்பட்டான். காவிரியின் வடகரை வழியே சென்றான். அங்கொரு சோலையிலே, கவுந்தி அடிகளைக் கண்டான். கவுந்தி அடிகள் சைன சமயத்தைச் சார்ந்த தவ முதுமகள். மூவரும் வழி நடந்து உறையூர் சேர்ந்தார்கள்.

## வழியிலே

உறையூரிலே அன்று தங்கி இளைப்பாறி, அவர்கள் மறுநாள் புறப்பட்டு, வழிப்போக்கன் ஒருவனால், மதுரைக்கு வழி தெரிந்து நடந்தார்கள். வழியிலே ஒருநாள் காலையில் கோவலன் காலைக்கடன் கழிக்கப் பொய்கைக் கரைப்பக்கம் போனான். அங்கே மாதவியால் அனுப்பப்பட்டுத் தன்னைத் தேடிவந்த கௌசிகனைக் கண்டான். கௌசிகன் மன்றாடி அழைத்தான். கோவலனுக்கோ திரும்பிச்செல்ல மனமில்லை. பிரிவால் வருந்தும் தன் தாய் தந்தையர்க்கு வணக்கம் தெரிவிக்கும்படிச் சொல்லி, அத்தூதனை அனுப்பினான். பின்பு கவுந்தியடிகளுடன் பிரயாணமாகி மதுரையை அடைந்தான். வையையாற்றைத்

தொழுது படகேறி, அதனைக்கடந்து, புறஞ்சேரியிலே, சமணமுனிவர் இருக்கையிலே தங்கினன்.

### புறஞ் சேரியிலே

மறுநாட்காலையிலே, கோவலன் கவுந்தியடிகளை வணங்கித் தன் துயரங்கூறி வருந்தினன். அடிகள் தேற்ற அவன் தேறிக் கண்ணகியை அவர் பாதுகாவலிலே வைத்துத் தனியே சென்று மதுரையைச் சுற்றிப் பார்த்தான். அதன் வளங்கண்டு மகிழ்ந்து, திரும்பிச் சென்று, கவுந்தியிடம் மதுரையின் வனப்பையும் பாண்டியன் பண்பையும் பற்றிப் பேசிக்கொண்டிருந்தான். அப்போது, மாடலன் என்ற தன் பழைய நண்பன் அங்கே வர, அவனுடன் அளவளாவியிருந்தான்.

### ஆயர் பாடியிலே

கவுந்தியடிகள் தம்மிடம் வந்த மாதரி என்ற இடைச்சியின் குணங்களைக் கருதி, கண்ணகியை அவள் பொறுப்பிலே ஒப்புவித்தார். மாதரியும் மகிழ்ந்து ஏற்றுக் கண்ணகியைக் கோவலனுடன் அழைத்துச் சென்று, ஆயர்பாடியிலே தன்னுடைய மனை ஒன்றிலே அவர்களைக் குடியிருத்தினள். சமையலுக்கு வேண்டிய பண்டங்களைத் தந்தாள். தன் மகள் ஐயையைத் துணை வைத்தாள். கண்ணகியும் பக்குவமாகச் சமைத்துத் தன் கணவனுக்குப் பரிமாறினள். கோவலனும் உணவை முடித்து உவந்தான். தன் மனைவியை அருகில் அழைத்து, அருமை பாராட்டித் தன் கூடா ஒழுக்கத்துக் கிரங்கினன். ‘சிலம்புகளிலே ஒன்றை விற்று விரைவில் வருவேன்; அதுவரை நீ ஆற்றியிரு’ என்று கூறி, சிலம்பைப்

பெற்றுச் சென்ருன். எதிர்ப்பட்ட அபசகுனங்களை அறியாமல், மதுரையின் ஆவண வீதியிலே புகுந்தான்.

## ஆவண வீதியிலே

பொற்கொல்லர் நூற்றுவர் பின் தொடர, மிகுந்த ஆடம்பரத்துடன் நடந்துவரும் பொற்கொல்லர் தலைவனைக் கண்டு, கோவலன், தான் கொணர்ந்த சிலம்பை விலை மதிக்குமாறு அவனிடம் காண்பித்தான். அவன் அதைப் பார்த்தான். அவன், முன்பு இராசமாதேவியின் சிலம்பை வஞ்சித்துத் திருடியவன் ஆதலால், களவு தன்னிடத்தது என்று வெளிப்படுமுன், (தான் கவர்ந்த சிலம்போடொத்த இதனைக் கொடுத்த) கோவலன்மீது குற்றத்தைச் சுமத்தக் கருதினன். இதனை அரசனிடம் காட்டி வருமளவும் தன் மனைக்கருகிலே ஓரிடத்தைச் சுட்டிக் கோவலனை அங்கே இருக்கச் சொல்லி, அரண்மனைக்குச் சென்ருன். பாண்டியனே தன் அந்தப்புரத்தை நோக்கிப் போய்க் கொண்டிருந்தான். அவனைக் கண்டு, 'அரசே! கன்னக்கோலின்றி, சிலம்பு திருடிய கள்வன் அடியேன் கடைவாசலில் வந்திருக்கிருன்' என்ருன். பாண்டியன் தன் மனைவியை மகிழ்விக்க எண்ணினன்; ஆதலின், காவலரை அழைத்து, 'தேவியின் சிலம்பு இவன் கூறிய கள்வன் கையகத்ததாயின் அவனைக் கொன்று சிலம்பைக் கொண்டு வாருங்கள்' என்ருன். தனதெண்ணம் பலித்ததென்று பொற்கொல்லன், காவலரை அழைத்துக் கோவலனிடம் சென்று, 'அரசன் ஆணைப்படி இவர்கள் சிலம்புகாண வந்தார்கள்' என்ருன். காவலர்கள் கோவலனைக் கண்டு, அவன் முகக் குறி

முதலியவற்ருல் 'இவன் கள்வன் அல்லன்' என்று மலைந்தார்கள். அவர்களுள் ஒருவன், கொலையஞ்சாக் கொடியவன்; அவன் யோசனை இன்றித் தன் கை வாளால் கோவலனை வெட்டி வீழ்த்திஞன்.

## கண்ணகி சீற்றம்

ஆயர்பாடியிலே பலவித உற்பாதங்கள் தோன்றின. உற்பாத சாந்தியாக மாதரி முதலியோர் திருமாலைக் குறித்துக் குரவைக் கூத்தாடினர்கள். கூத்தின் முடிவிலே, நீராட வைகையாற்றுக்குச் சென்ருர்கள். அவ்வமயம் அகநகரினின்றும் வந்த ஒருத்தி, கோவலன் கொல்லப்பட்ட செய்தியைக் கூறினள். அது கேட்ட கண்ணகி பதறினள். மூர்ச்சித்தாள்; பலவாறு கதறினள். கணவனுடன் தானும் இறக்கத் துணிந்தாள். இடைச்சியர் சூழ்ந்து நிற்க, சூரியனை நோக்கி, 'செங்கதிர்ச் செல்வனே! நீ அறிய என் கணவன் கள்வனே?' என்ருள். 'அவனைக் கள்வன் என்ற இவ்வூரைத் தீயுண்ணும்' என்று அசரீரி எழுந்தது. அதனைக் கேட்ட கண்ணகி, மிகுந்த சீற்றங்கொண்டாள். தன்னிடமுள்ள மற்ருெரு சிலம்புடனே கண்டவர்கள் நடுங்கத் தெருவழியே நடந்தாள். ஆங்காங்குள்ள பெண்களை நோக்கிப் பலவாறு புலம்பினள். வெட்டுண்ட கணவனைச் சிலர் காட்டக் கண்டு, அளவிலாத் துன்பத்தில் ஆழ்ந்து, பிரேதத்தின் மீது வீழ்ந்து கதறினள். அவ்வளவிலே (குற்றுயிராய்க் கிடந்த) கோவலன் உயிர் பெற்றெழுந்து 'உன் மதிமுகம் வாடியதே' என்று, தன் கையால் அவள் கண்ணீரை மாற்றி, 'இனி நீ இங்கிரு' என்று தன் உடம்பை ஒழித்துத் தேவர் உலகு எய்தினன்.

## வழக்காடல்

கண்ணகி பயங்கரமான பெருஞ்சீற்றத்துடன் சென்று அரண்மனை வாயிலை அடைந்து, தன் வரவை வாயில் காவலனால் அரசனுக்கறிவித்தாள். அப்போது, கோப்பெருந்தேவி தான் கண்ட தீச்சகுனங்களைப் பாண்டியனிடம் கூறிக்கொண்டிருந்தாள். அரசன் அனுமதி கிடைத்ததும் அவன் முன்சென்று, அவன் கேட்பத் தன் ஊர் பெயர் முதலிய கூறினாள்; கோவலனை ஆராயாது கொன்ற கொடுங்கோன்மையைப் பெருந் துணிவுடன் எடுத்தியம்பினாள். இதனைக் கேட்ட பாண்டியன் 'கள்வனைக் கோறல் கடுங்கோல் அன்று, வெள்வேல் கொற்றங்காண்' என்றான். கண்ணகி, தன் கணவன் கள்வன் அல்லன் என்பதைக் காட்டும்பொருட்டுத், தன்னுடைய சிலம்பினுள்ளே யிருக்கும் பரல் மாணிக்கம் என்றாள். அரசனும் தன் சிலம்பின் பரல் முத்து என்றான். உண்மையைச் சோதிப்பதற்காகக் கோவலனிடமிருந்து கொண்ட சிலம்பு வருவிக்கப்பட்டது. அதனைக் கண்ணகி எடுத்து, தன் கையால் உடைத்தாள். உடைக்கவே, அதனுள்ளிருந்த மாணிக்கப்பரல் அரசன்முன் தெறித்தது. அது கண்ட பாண்டியன் பதைத்து, 'யானோ அரசன், யானே கள்வன். பொற்கொல்லன் சொல்லைக் கேட்டு நீதி தவறிய என்னால், அரசகுலமே பெரும்பழி அடைந்தது. இப்போதே என் ஆயுள் அழியக்கடவது' என்று புலம்பி, மனமுடைந்தான். தானிருந்த சிங்காதனத்தே வீழ்ந்து உயிர் விட்டான். உத்தம பத்தினி ஆகிய கோப்பெருந்தேவியும் கணவனை இழந்த துயரந்தாங்காது உடனுயிர் நீங்கினாள்.

### மதுரையை எரித்தல்

தன் கணவன் கள்வனல்லன் என்பதை வழக்காடி மெய்ப்பித்த கண்ணகி, சினஞ் சிறிதும் தணியாளாய், மதுரையை அழிப்பேன் என்று வஞ்சினங்கூறி, அரண்மனையைவிட்டு வெளி ஏறினுள். அகநகரை அடைந்து, தன் இடத்தனத்தைத் திருகி எடுத்து நகர் மீது எறிய, நகரிலே தீப்பற்றிப் பல இடங்களையும் எரித்தது. அதனுல், வெம்மை ஆற்ருத மதுரையின் அதிதேவதை, கண்ணகி முன்தோன்றி, நான் இந்த நகரின் தெய்வம் ; பாண்டியர் யாரும் கொடுங்கோலர் அல்லர் ; நெடுஞ்செழியனும் அத்தகையானே. பதினுன்காம் நாள் பகல் சென்றபின்பு, நீ உன் கணவனைச்சேர்வாய்' என்று சொல்லி, அவளைத் தேற்றியது.

### திருமாபத்தினி

பின்பு, கண்ணகி வைகைக் கரைவழியே மேற்றிசை நோக்கி நடந்தாள். சேரநாடு சென்று நெடுவேள்குன்றம் அடிவைத்தேறி, அங்கே ஒரு வேங்கை மர நிழலிலே நின்ருள். மலைவேடுவர் சிலர், அவளை நெருங்கித், 'தாங்கள் யாரோ' என்று வினவக், 'கணவனை இழந்து வந்த கடுவினையேன் நான்' என்ருள். அதுகேட்ட மலைவாணர் அஞ்சி, அவளை வணங்கி நின்றபோது, மலர்மாரி பொழியத் தேவர் குழாம் அங்கு வந்து, கண்ணகிக்கு அவள் காதற் கொழுநனைக் காட்டி, அவளையும் விமானத்தேற்றி, விண்ணுலகு சென்றது. இந்த அற்புத நிகழ்ச்சியை நேரிலே கண்ட வேடுவர் வியப்பும் உவப்பும் கொண்டு, 'இந்த மாதராள் நம் குலத்துக்கே ஒரு பெருந்தெய்வ மாவாள்', என்று, தம்மவரை ஒருங்கழைத்து, ஆர்ப்

பரித்து, மலைநாட்டு முறைப்படி, குரவைக்கூத்தாடினர்; அதற்குரிய பாடலைப்பாடித் திருமாபத்தினிக்குப் பெருஞ் சிறப்புச் செய்தார்கள்.

1. சொல்லும் தொடரும் :

| | | |
|---|---|---|
| அறவோர்க்களித்தல் | வழிப்போக்கன் | கோப்பெருந்தேவி |
| அந்தணரோம்பல் | கூடா ஒழுக்கம் | கொடுங்கோன்மை |
| கடையாமம் | ஆவணவீதி | நெடுவேள்குன்றம் |

2. சிந்தனைக்கு :

1. கண்ணகி, பாண்டிமாதேவி—இவர்களை ஒப்பிடு.
2. நெடுஞ்செழியன் நீதியைப்பற்றி என்ன எண்ணுகிறீர்கள் ?
3. திருமா பத்தினி என்று கண்ணகியைச் சொல்லுவதேன்?
4. தற்போது நாடோடியாக வழங்கும் கோவலன் கதை சிலப்பதிகாரத்தினின்றும் எப்படி வேறுபடுகிறது ? எதனுல் ?

3. பயிற்சி :

உற்பாத சாந்தியாக மாதரி முதலியோர் திருமாலைக் குறித்துக் குரவைக் கூத்தாடினுர்கள்.—இந்த வாக்கியத்திலே பயிலும் சொற்களைக் கவனியுங்கள். திருமால், குரவை, கூத்து —இவை தமிழ்ச் சொற்கள்; உற்பாதம் சாந்தி—இவை சமஸ்கிருதச் சொற்கள். சமஸ்கிருதமே அன்றி பிறமொழிச் சொற்களும் தமிழிலே வந்து வழங்குகின்றன. அவை வருமாறு :

1. கச்சேரி, கிச்சிடி, சட்னி, ரூபாய், இனும், சாமான், பங்கா, படுதா—இவை இந்துத்தானி.
2. அத்தர், அமல், கரார்—இவை அரபி.
3. அல்மாரி, குல்லா, பஜார்—இவை பாரசீகம்.

3. கதைகளிலே

## 2. பஞ்ச தந்திரம்

கோதாவரி நதிக்கரையின்கண் ஒரு பெரிய வன்னிமரத்தில் லகுபதனன் என்னும் காகம் வாசஞ் செய்து கொண்டிருக்கையில், ஒரு நாள் விடியற் காலத்தில் அங்கே எமனைப்போல் மிகவும் பயங்கர மான வேடன் ஒருவன் வந்தான். லகுபதனன் அவனைப் பார்த்துப் பயப்பட்டு 'இந்தக் கொடியோன் யாது செய்வானே, தெரியவில்லை; ஆகையால் இதைச் சோதிக்க வேண்டும்' என்று, இரை தேடாது அவனையே கவனமாய் உற்று நோக்கிக் கொண்டிருந் தது. அவ்வேடன் வலையை விரித்துப் பலவகைப் பட்ட தானியங்களைத் தெளித்து, அங்கே ஒரு செடி மறைவில் பதுங்கிக் கொண்டிருந்தான். அதன் பிறகு, தன் பரிவாரத்தோடு அந்த மரத்தில் வந்திறங் கின சித்திரக்கிரீவன் என்னும் புருவரசு, அங்கே இறைத்திருக்கும் தானியங்களைப் பார்த்துத், தனது பரிவாரப் புருக்களுடனே, 'இந்தக் காட்டிலே தானி யம் எப்படி வரும்? யாராயினும் கொண்டு வந்து போட்டிருக்க வேண்டும். இது நமக்குத் தெரிந்தா லல்லாமல் இதைத் தின்னலாகாது; ஏனென்றால், ஒரு பிராமணன் பொற்காப்புக்கு ஆசைப்பட்டுப் புலியினால் எப்படி மரணம் அடைந்தானே அப்படி இதுவும் ஒரு விபரீதமாகத் தோன்றுகிறது' என,– புருக்கள் அதைக் கேட்டு, 'அதெப்படி? மகா ராசாவே!' எனச்,–சித்திரக்கிரீவன் சொல்லலுற்றது.

'நான் தென்காட்டில் மேய்ந்து கொண்டிருக்கை யில் பார்த்தேன்; அதைக் கேளுங்கள். ஒரு கிழப் புலி பலவீனத்தால் ஆகாரம் சம்பாதிக்கக் கூடாமல்,

ஓர் ஏரிக்கரையிலே நீராடிக் கையில் தருப்பையை வைத்துக்கொண்டு உட்கார்ந்திருக்கையில், ஒரு பிராமணன் அந்த வழியிலே வந்தான். புலி அவனைப் பார்த்து, 'ஓ! பிராமணா! இந்தப் பொற்காப்புத் தருகிறேன், வா' என்றது. இதைக்கேட்டு அப் பிராமணன் அப்புலியை நோக்கிச் சற்று ஆலோசனை செய்து, 'இந்தக் காப்பு நமக்கு வலியக் கிடைக்கிறது; ஆனால் புலியின் கிட்டப் போகலாகாது; ஆகையால், இந்தக் காப்பில் ஆசைவைக்கலாகாது என்போமானால், மரணத்துக்கு நானுபக்கமும்வழி' என்று இவ்விதமாகத் தன் பேராசைக்கேற்பத் தனக்குள் நிச்சயித்துப், புலியைப் பார்த்து, 'ஐயா! புலியாரே, காப்பு எங்கே யிருக்கிறது!' என,–'இதோ இருக்கிறது, பிராமணோத்தமரே' என்று புலி காட்டிற்று.

பிராமணன், 'உன்னிடத்தில் எனக்கு எப்படி நம்பிக்கை?' என,–புலி, 'நான் வைகறையில் மூழ்கி நித்திய தானம் பண்ணிக் கொண்டிருக்கிறேன். நகமும் பல்லும் போன கிழவனுயிருக்கிறேன். இப்போது என்னிடத்தில் நம்பிக்கையில்லையா? வேட்டல், ஓதல், கொடுத்தல், தவம், சத்தியம், உறுதி, பொறுமை, ஆசையின்மை யென்னும் இவ்வெட்டுத் தருமங்களையும் நான் அறிந்திருக்கிறவனுதலால், இந்த அரிய வஸ்துவை யாருக்காகிலும் கொடுக்க இச்சிக்கிறேன். இதனுல் என்னிடத்தில் நற்குணமிருக்கிறதென்றும் எள்ளளவாகிலும் தீக்குணமில்லை யென்றும் அறியவில்லையா?' என்றது. அப்போது பிராமணன், 'இது மெய்தான். ஆனுல், புலி மனிதரை அடித்துத் தின்னுகிறதென்ற உலகவழக்கம் இருக்கிறதே' என,–'நான் தரும சாத்திரம் அறிந்திருக்

கிறேன். பெரியோர் தம் உயிர்போலப் பிற உயிர்களையும் நேசித்து, எல்லா உயிர்களிடத்தும் கருணை காட்டுகின்றனர். தமக்கிருப்பனபோலவே சுக துக்கங்கள் பிறருக்கும் இருக்கும் என்று நினைக்கிறார்கள். நீ மிகவும் தரித்திரன். ஆகையால் உனக்குக் கொடுக்கக் கருதுகிறேன். சாத்திரம் இப்படியே இருக்கிறது. எவ்விதத்திலும் ஏழைக்கே கொடுக்க வேண்டும். செல்வமுள்ளவனுக்குக் கொடுக்கலாகாது. ஏனென்றால், மருந்து நோயாளிக்கு எப்படி குணங்கொடுக்குமோ, அப்படி நோயில்லாதவனுக்குக் கொடுக்குமா? ஆதலால், நீ இந்த ஏரியிலே முழுகிவந்து, காப்பை வாங்கிக்கொண்டு வீட்டுக்குப் போ' என்றது. ஐயோ! பிராமணனுக்குப் பின்புத்தி; ஆகையால், அவன் புலியின் பேச்சை நம்பி ஏரியில் இறங்கினவுடனே, உளையிலே புதைந்து, காலைப் பிடுங்கிக் கொண்டு வெளியேறக் கூடாமல் திகைத்தான்.

புலி, அவனைப்பார்த்து, 'பிராமணா! பயப்படாதே. நான் உன்னைச் சேற்றினின்றும் எடுக்கிறேன்; சற்றிரு' வென்று சொல்லி, மெல்லெனப் போய் அவனைப் பிடித்துக்கொண்டது. அப்போது, பிராமணன், 'துட்டர்கள் வேதம் ஓதியிருந்தாலும், தரும நூல்கள் பார்த்திருந்தாலும் அவர்கள் வார்த்தையிலே நம்பிக்கை வைக்கலாகாது. ஏனென்றால், ஒருவனது இயற்கைத் தன்மை ஒருபோதும் மாறாது. இதனை முன்யோசனை செய்யாது, எனது பேராசையினால், இந்தத் துட்டனுடைய ஆசை வார்த்தைகளை நம்பி மோசம் போனேன்,' என்று நினைந்து வருந்திக்கொண்டிருக்கையிலே, அந்தப் புலி அவனைக் கொன்று தின்றது.

'ஆகையால்,' மிகவும் ஆலோசனை பண்ணி,

எது செய்யத் தக்கதோ அதைச் செய்ய வேண்டும். அப்படி செய்தால், யாதொரு தீங்கும் நேரிடாது' என்று, சித்திரக்கிரீவன் சொன்ன வார்த்தையைக் கேளாது, ஒரு புரு கருவத்தோடு 'இப்படி ஆலோசித்தால் ஓர் இரையும் நமக்கு அகப்படாது. மேலும், வெட்கப்படுகிறவன், பொருமையுள்ளவன், சந்தோஷப்படாதவன், குரோதம் உள்ளவன், தீராத சந்தேகம் உள்ளவன், பிறர் பொருளால் பிழைக்கிறவன் இந்த ஆறு பேரும் துக்கத்தையே அனுபவிப்பார்கள்' என்று சொல்ல, அதைக் கேட்டு, புருக்களெல்லாம் தானியத்தைத் தின்னும் பொருட்டு, நிலத்திலிறங்கி வலையில் அகப்பட்டன. புருவரசும் அதைப் பார்த்து, 'எல்லோரும் என் சொல்லைக் கேளாமற் போனார்கள்; இப்போது நான் ஒன்றியாயிருந்து பலன் என்ன?' என்று சொல்லி, அதுவும் வலையில் வந்து அகப்பட்டது.

பட்சிகள் வலையிலே சிக்கிக்கொண்டதை வேடன் பார்த்து, அவ்விடத்துக்கு வரத் தொடங்கினான். அதைப் புருக்கள் கண்டு, சித்திரக்கிரீவனைப் பார்த்து, 'நீ சொன்ன புத்தியைக் கேட்டு, நாங்கள் உன்னை அவமானம் பண்ணினோம். அதன் பலன் நிறைவேறிற்று' என்றன. அதற்கு, சித்திரக்கிரீவன், 'இப்பொழுது இதைச் சொல்லிப் பயன் என்ன? இதற்கு ஒருபாயம் இருக்கிறது. எல்லோரும் வலையோடு ஒருமிக்கப் பறந்து வேறிடத்திற்குப் போகவேண்டும்; அப்படிச் செய்தால்தான் உயிர் பிழைக்கலாம்' என்றது. இதைக் கேட்டவுடனே எல்லாப் பறவைகளும் வலையோடு கூட விரைவிலே பறந்து போயின. அதை வேடன் தூரத்திலிருந்து பார்த்து ஆச்சரியப்பட்டு, 'இவைகள் ஒரே மனதாய் வலையை

யெடுத்துப் போயின ; ஆயினும் இவைகளுள் ஒன்றுக்கொன்று சண்டை நேரிடும் ; அப்பொழுது என் கையில் அகப்படும்' என்று நினைத்துக்கொண்டு, அவைகளின் பின்னே ஓடும்போது, புருக்கள் கண்ணுக்கு எட்டாமல் மறைந்து போய்விட்டபிறகு அவன் வருத்தப்பட்டுத் திரும்பி வந்துவிட்டான்.

இவ்வாச்சரிய மெல்லாம் பார்த்திருந்த லகுபதனன் என்னுங் காகம், அந்தப் புருக்களின் பின்னே போயிற்று. கபோத ராசா தன் கூட்டத்தைப் பார்த்து, 'கண்டகிநதி தீரத்திலிருக்குஞ் சித்திர வனத்தில் என் சிநேகிதனுன இரணியகன் என்னும் எலியரசன் ஒருவன் இருக்கிறுன். அவன் பல்லினுலே நம்முடைய வலையை அறுப்பான். ஆகையால், அங்கே செல்லுங்கள்' என்றது. இதைக் கேட்டு அவை அப்படியே சென்று எலியரசன் வலையண்டை இறங்கியது.

அப்போது ஏதாவது ஆபத்து நேரிடும் என்பதைக் குறித்துத், தன் வளைக்கு நூறு வழி செய்துகொண்டு உள்ளேயிருந்த எலியரசன் புருக்கள் இறங்கின சப்தத்தைக் கேட்டு அச்சமுற்று அடங்கி யிருக்கையில், சித்திரக்கிரீவன், 'சிநேகிதா ! இரணியகனே ! எங்களோடே ஏன் பேசவில்லை !' என,— இரணியகன் இதைத் தன் சிநேகிதனுடைய தீங்குரல் என்றறிந்து, சந்தோஷத்தோடு சீக்கிரமாக வளையினின்றும் வந்து, 'நான் புண்ணியவானுகையால் சித்திரக்கிரீவன் என்னும் நண்பன் என் வீட்டுக்கு வந்தான். இவ்வுலகத்திலே மனமொத்த நண்பனேடு உரையாடுவதிலும் ஆனந்தம் வேறெது ?' என்று உபசாரம் சொல்லிப், பிறகு அதனுடைய துன்பத்தைப் பார்த்து மிகவும் துக்கித்து, 'மித்திரா ! நீ எல்லா

ரினும் மிக்க சமர்த்தனுயிற்றே, உனக்கு இப்படிப் பட்ட காரியம் எப்படி நேரிட்டது ?' என,—'எந்தக் காலத்தில் எது நடக்குமோ அது நடக்கும்! விதி வலியது. அதன் முன் எவருடைய உபாயம் நடக்கும்? கடல் பெருகி மேலிட்டால் அதற்குக் கரையேது ?' என்று புரு கூறிற்று.

இரணியகன், 'இந்தப் பேச்சு மெய்யே ; நூறு நாழிகை வழித் தூரத்திலிருந்து பொருள்களைத் தெரிந்துகொண்டு போகிற நீ, இன்றைக்கு வேடன் வலையைப் பாராமற் சிக்கிக் கொண்டனையே, பார் ! சந்திர சூரியர்களுக்கு ராகு கேதுக்களாற் பீடை வருதலும், யானையும் பறவையும் பாம்புங் கட்டுப் படுதலும், புத்திசாலிகளுக்கு வறுமை வருதலுந் தெய்வத்தின் மகிமையேயாகும்.' என்று சொல்லிச் சித்திரக் கிரீவன் கட்டுண்டிருந்த வலைக் கயிற்றை அறுக்கத் தொடங்கிற்று.

அப்போது சித்திரக்கிரீவன், 'மித்திரா! முன்னே என் பரிவாரத்தினுடைய கயிற்றை அறு ? பிறகு என் பாசத்தைத் துணி' என,—அதைக் கேட்டு எலி, 'என் பல் மிகவும் மெதுவானது ; அதற்குப் பலமுங் கொஞ்சம் ; ஆகையால், இத்தனை பெயருடைய பந்தனைகள் எனக்கு எப்படி அறுபடும் ? உன் தளையை அறுத்துப் பின்னர் என் சாமர்த்தியத்துக்குத் தக்கபடி அவர்களுடைய தளையையும் அறுப்பேன்' என,—சித்திரக் கிரீவன், 'நல்லது, முன்னே இவர்களுடைய பாசத்தை அறு' என்றது. அதற்கு இரணியகன், 'தன்னைக் காப்பாற்றிக்கொண்டு தன் பரிவாரங்களைக் காப்பாற்ற வேண்டும்' என,—சித்திரக்கிரீவன், 'இந்த நீதி சரிதான் ; ஆயினும், இப்படிப்பட்ட வேதனையினின்றும் பாதுகாப்பதற்காகவே இவர்கள் என்னை

அரசனுக எண்ணுகிருர்கள். ஆகையால், என் பிராணனிடத்தில் இச்சையை விட்டு இவர்களைக் காப்பாற்று' என்றது. அதைக் கேட்டு எலி, 'நீ பரமசாது. அடுத்தவர்களை ஆதரிக்கின்றவனுய் இருக்கிருய்' என்று சொல்லி, எல்லாவற்றின் பாசங்களையும் அறுத்துப் பின்பு, சித்திரக்கிரீவனுடைய கட்டையும் சேதிக்கலாயிற்று.

பிறகு ஒன்றையொன்று தழுவிக்கொண்டு, பிரிய வார்த்தைகள் பேசின. சித்திரக்கிரீவன் பரிவாரத்தோடு தன்னிடத்துக்குப் போயிற்று.

**1. சொல்லும் தொடரும் :**

| | | |
|---|---|---|
| விபரீதம் | தருமநூல் | மித்திரன் |
| துராசை | ஆலோசனை | வேதனை |
| நித்தியதானம் | நதிதீரம் | பாதுகாப்பு |

**2. சிந்தனைக்கு :**

1. 'ஒருவனது இயற்கைத் தன்மை ஒருபோதும் மாருது':—உண்மைதாஞ'

2. 'புத்திசாலிகளுக்கு வறுமை வருதல் தெய்வத்தின் மகிமையே' இது சரியா?

3. 'வேதனைகளினின்றும் பாதுகாப்பதற்காகவே இவர்கள் என்னை அரசனுக எண்ணுகிருர்கள்?:—அரசாங்கத்தைப் பற்றி நீங்கள் என்ன எண்ணுகிறீர்கள்?

**3. பயிற்சி :**

1. பிரித்தெழுது :

| | |
|---|---|
| இறைத்திருக்கும் | உயிர்களிடத்து |
| வந்திறங்கின | நோயில்லாதவன் |
| தெரிந்தாலல்லாமல் | வருந்திக்கொண்டிருக்கையில் |
| பிராமணேத்தமர் | அதைக்கேட்டு |
| எள்ளளவாகினும் | ஒன்றையொன்று தழுவிக்கொண்டு |

2. சேர்த்தெழுது :
பொன் + காப்பு
இ + எட்டு
அ + புலி
ஒரு + உபாயம்
கிழவனும் + இருக்கிறேன்
அடித்து + தின்னுகிறது + என்ற
எல்ல + உயிர்கள் + இடத்தும்
உனக்கு + கொடுக்க + கருதுகிறேன்

4. இலக்கணம் :

1. லகுபதனன் அவனைப் பார்த்துப் பயப்பட்டு.
2. துட்டர்கள் தரும நூல்கள் பார்த்திருந்தாலும்.
3. வறுமை வருதலுந் தெய்வத்தின் மகிமையே.
—இந்த சொற்சேர்க்கைகளை ஆராய்க.

மேலே கண்ட தொடர்களில் இரண்டிரண்டு சொற்கள் சேர்ந்திருக்கின்றன அல்லவா? இந்த சொற் சேர்க்கையை இலக்கணத்திலே புணர்ச்சி என்பார்கள்.

மழை பெய்தது என்று வருவது இயல்புப் புணர்ச்சி ;
வாழை + பழம் = வாழைப் பழம்—'ப்' தோன்றியது.
பணம் + கொடு = பணங் கொடு —'ம்'; 'ங்' ஆகந்திரிந்தது.
மரம் + வேர் = மர வேர் —'ம்' கெட்டது.
—இது விகாரப் புணர்ச்சி

படிக்கிறபோது கவனமாகப் படித்தால், கேட்கிறபோது கவனமாய்க் கேட்டால் புணர்ச்சிகளைப் பற்றிய சங்கடங்களைத் தவிர்க்கலாம். வாழைபழம்; கீரைகறி என்று தமிழன் சொல்ல மாட்டான் அல்லவா?

# அதிவீரனும் வரதுங்கனும்

**பாண்டியர்**

படைப்புக் காலந்தொட்டு மேம்பட்டு வந்த பாண்டியர் பதினைந்தாம் நூற்றாண்டிலே வலி குன்றினர். தமிழ் நாட்டுச் சரித்திரத்திலே பதினாறும் நூற்றாண்டு முக்கியமானது. விசயநகர வேந்தர் தமிழகத்தைத் தம் ஆதிக்கத்திலே கொண்டுவந்தனர். தமிழரசராகிய சேர சோழர் வமிசங்கள் கருகின. மதுரையை விட்டு விலகிப் பாண்டிய மரபினரும் திருநெல்வேலிப் பிரதேசத்தை ஆண்டுவரலாயினர். இவர்கள், தாய் மொழியைக் கருத்துடன் பேணினர். இவருள் முன்னோன் அரிகேசரி பராக்கிரமன்—கி. பி. 1422-52. தென்காசி நகரை அமைத்தது இவன்தான். அங்கே ஸ்ரீ விசுவநாதருக்குப் பெரிய கோயில் எடுத்தான். இவன் மரபிலே வந்த அதிவீரராமன், கி. பி. 1564-ல் பட்டம் எய்தினான். இவனுடைய தந்தை திருநெல்வேலிப் பெருமாள் என்ற குலசேகரப் பெருமாள், தருமத்திலே பெரியன்; அவன் வீரவேளாகவும் கலை விநோதனாகவும் விளங்கினான். அவன்மீது பாடப்பெற்ற வெண்பா மாலை ஒன்றுண்டு. தந்தையைப் போலவே தனயனும் அதிவீரனாகவும் அருங் கவியாகவும் திகழ்ந்தான். சங்க காலந்தொடங்கிப் பாண்டியர் கல்வியில் மேம்பட்டவர் அல்லவா ?

**அதிவீரன்**

அதிவீரராமனுடைய இயற் பெயர் அழகன் பெருமாள். வீரமாறன், சீவலமாறன் என்பன இவனுடைய பட்டப் பெயர்கள். அதிவீரனுடைய ஆசிரி

யர் சுவாமித்தேவர். தேவர் கல்வி கேள்விகளிலே தேர்ந்தவர் ; ஆசு கவிகளின் திறமையை அளந்தறிய வல்லர் ; சமஸ்கிருத ஞானம் உடையவர். இத்தகைய நல்லாசிரியரிடம் பயின்ற அதிவீரன், சிறந்த கவியாகத் திகழ்ந்ததிலே வியப்பில்லை. பெரிய கொடை வள்ளலாகவும் அவன் விளங்கினான்.

சிவபத்தியிலும் அதிவீரன் சிறந்து திகழ்ந்தான். தன் தந்தை பெயரால், தென்காசியில் பெரிய கோயிலுக்கு மேல் 'பால் ஒரு கோயில் கட்டி அதிவீரன், நாற்பதாண்டுக்குமேல் அரசாண்டான். இவன் பாடிய நூல்கள் :—நைடதம், காசி காண்டம், கூர்மபுராணம், இலிங்கபுராணம், வெற்றிவேற்கை.

**வரதுங்கன்**

அதிவீரனுக்குப் பிறகு, வரதுங்கன் அரியணை அமர்ந்தான். அதிவீரனுடைய பெரிய தந்தையின் இளைய மைந்தன் வரதுங்கன். நிரம்பிய கல்வி வாய்ந்தவன். நிம்பை என்ற வேம்பத்தூர் ஈசான முனிவரிடம் கல்வி பயின்றான். இளமையிலேயே வீரத்திலும் கல்வியிலும் கொடையிலும் மேம்பட்டு விளங்கினான். தஞ்சை அச்சுதப்ப நாயக்கர் மதுரை நாயக்க மன்னரை எதிர்த்தபோது, வரதுங்கன் மதுரை யாருக்காக வல்லம் என்ற ஊரிலே போர் புரிந்தான். ஸ்ரீவில்லிபுத்தூர்—புதுக்கோட்டையை அந்தணர் பலருக்குத் தானம் வழங்கினான். மருத்துவன் ஒருவனுக்கு முருகனேரி என்ற ஊரை முற்றூட்டாக விட்டான். கோவிந்தப் பட்டனுக்குச் சிலாரிப் பட்டியைத் தந்தான். பரத நாட்டியத்திலே வல்ல மாணிக்கம் என்பவளுக்கு நிலபுலங்களைக் கொடுத்தான். இவனுடைய சபையிலே, புலவர்கள் பலர்

குழுமியிருந்தனர். அவர்களுள் சிறந்தவர் காசிக் கலியன் கவிராயர். வரதுங்கனுடைய குடையை, கொடையை, வாளைப் புகழ்ந்து வாழ்த்திய பாடல்கள் தென்காசிக் கோயிற் சுவரிலே பொறிக்கப்பட்டுள்ளன.

வரதுங்கன் பாடியவை :

1. பிரமோத்திர காண்டம்.
2. திருக்கருவைப் பதிற்றுப் பத்தந்தாதி.
3. திருக்கருவை வெண்பா அந்தாதி.
4. திருக்கருவைக் கலித்துறை அந்தாதி.

## புலவர் தீர்ப்பு

அதிவீரன், வரதுங்கன் என்ற ஒன்று விட்ட சகோதரர் இருவருமே வீரமும், கொடையும், கல்வியும் உடையராய்த் தமது காலத்திலே யாவரினும் மேம்பட்டு விளங்கினர்கள். இவர்களைச் சூழ்ந்து நாளடைவிலே பல கதைகள் எழுந்தன. அதிவீரராமன் கல்வி கேள்விகளிலே வல்லவன் அல்லவா? அவன் இலிங்க புராணத்தை இயற்றி வரதுங்கனிடம் காட்டியபோது, வரதுங்கன், அது வெள்ளைப் பாட்டாக இருத்தலைக் கருதி முத்துப்போல் இருப்பதாகக் கூறினனும். அதற்காகவே அதிவீரன் நைடதத்தை இயற்றினனும். சொற் செறிவு, பொருட் பொலிவு, இறுக்கம் எடுப்புக்களிலே சிறந்து, நைடதம் புலவர்க்கு ஔடதமாகப் போற்றப்படுகிறது. அரிதின் முயன்று பாடிய நைடதத்தை அதிவீரன், வரதுங்கன் மனைவியிடம் காட்டியபோது, அவள் ஓடி இளைத்த நாய் போல் இருக்கிறது என்றுளாம். அதை அரங்கேற்றுகையிலே அவையிலே இருந்த புலவர்கள், அது, கரும்பு போலிருப்பதாகக் கூறினர்களாம். இவற்றின்

பொருள் என்ன தெரியுமா? அடிக் கரும்பு மிக்க இனிப்புடையது. மேனேக்கிச் செல்லச் செல்ல, தித்திப்புக் குறைகிறது; நுனி கரிக்கிறது. இதுபோலவே நைடதம் தொடக்கத்திலே சுவை மிகுந்து, போகப் போகச் சுவை குறைந்து காணப்படுகிறது. காவியம் முழுவதும் ஒரே தன்மையுடையதாக இல்லை. ஆதலின், அது ஓடி இளைத்த நாய் போலச், சென்று தேய்ந்திறுதல் என்னும் குற்றம் உடையது என்பது புலவர்கள் தீர்ப்பு.

முன்னுளிலே தமிழ் கற்கப் புகுவார் முதலிலே நைடதம் வாசிப்பது வழக்கம். அதிலே பல நூல்களின் சாரம் காணப்படுகிறது. இது 1172 விருத்தங்களை உடையது. நளன் தமயந்தியை மணந்து அடைந்த இன்ப துன்பங்களை இது கூறுகிறது. இது முதல் நூல் அன்று; வடமொழியிலே உள்ள நைடதம், நளோதயம் என்ற நூல்களையும், பாரதத்திலே பயிலும் நள சரிதையையும், தமிழிலே வழங்கும் நள வெண்பாவையும் நன்காராய்ந்தே அதிவீரன் இதை இயற்றினன். தமிழிலே இது ஒரு சிறந்த காவியமே.

1. சொல்லும் தொடரும் :

| | | |
|---|---|---|
| படைப்புக்காலம் | பட்டப்பெயர் | வீரவெண்பா |
| இயற்பெயர் | முற்றூட்டு | கொடைவள்ளல் |

2. சிந்தனைக்கு :

1. மதுரையினின்றும் பாண்டியர் திருநெல்வேலிச் சீமைக்கு எப்போது, ஏன் வந்தனர்?

2. சங்ககாலம் என்பது எதனை? அப்போது வெளியான தமிழ்ப் பாடல்கள் எவை?

3. நைடதத்தைப்பற்றிப் புலவர்களும் வரதுங்கன் மனைவியும் வெளியிட்ட அபிப்பிராயம் சரியா?

4. நூலரங்கேற்றம் முற்காலத்திலே எப்படி நிகழ்ந்தது? ஏதாவதொரு புதிய நூலொன்றைப்பற்றிப் பத்திரிகையிலே வெளியான விமரிசனத்தை எப்போதாவது நீங்கள் படித்திருக்கிறீர்களா ?

3. பயிற்சி :

நிறுத்துக் குறிகளைப் பற்றி :

,—இது காற்புள்ளி.

;—இது அரைப்புள்ளி.

:—இது முக்காற்புள்ளி.

?—இது விஞக்குறி.

!—இது வியப்புக்குறி.

" "—இது மேற்கோட்குறி.

( )—இது பிறைக்கோடு.

— —இது இடைக்கோடு.

: — —இது வரலாற்றுக் குறி.

வாக்கியங்களிலே பொருள் தெளிவு கருதி, நிறுத்துக் குறிகள் இடுவதுண்டு. காற்புள்ளி இடும் இடங்கள் எவை ?

1. அறம், பொருள், இன்பம், வீடு—இப்படிப் பொருள்களை எண்ணும்போது—

2. கந்தன் வந்தான், இருந்தான், சென்முன்—எழுவாய்க்குப் பல பயனிலைகள் வரும்போது—

3. ஐயா, இதைக் கேளுங்கள்—விளியில்—

4. ஆனல், அதனல், எனவே,—இணைப்புச் சொற்களில்—

5. அது அறியாமை அன்று, கவலை ஈனமே—மறுத்துக் கூறும்போது—

6. அரசன், எப்படியிருந்தாலும், அவன் மனிதனே—இடைப்பிற வைப்பில்—

இந்தப் பாடத்திலே அரைப்புள்ளி பயிலுமிடங்களைக் கவனித்துப் பார். முக்காற்புள்ளி எங்கே பயிலும் ? ஏன் ?

5. உரைவிளக்கம்

# அரவம் ஆடேல்

## பொருள்

அரவம் ஆடேல்—இது ஆத்திசூடியிலே பயிலும் ஓரனுபவ வாசகம். ஓசை உண்டாகும்படி செய்யாதே—அதாவது, வீண் வார்த்தை விளம்பாதே என்பது இதன் பொருள்.

வீண் வார்த்தை பலவிதப்படும். பொய் புகறல், கோட்கூறல், பயனில பகரல், இன்னுதன இயம்பல் ஆகிய இவை வாக்கிலே நிகழும் குற்றம். இவை பயிலாமல் நாவடங்கக் கற்கவேண்டும். நாவடக்கம் இல்லை என்ருல், பல்வேறு துன்பங்களுக்கு ஆளாகித் துயரப்பட நேரிடும்.

காது கொடுத்துக் கேள் ; ஆனுல், நாவை நீட்டிப் பேசாதே. பேச நேர்ந்தால் உண்மையைப் பேசு ; புறங் கூறல் தவறு ; பொய் கூடாது. மொழியடக்கம் வேண்டும். நாம் காணும் தெருச் சண்டை, வீட்டுச் சச்சரவுகளுக்கெல்லாம் வீண் வார்த்தைகளே காரணம்.

## நா அடங்காமை

பாரத கதையிலே வீமனை நீங்கள் அறிவீர்கள். தருமர் ராசசூய யாகம் நடத்தினுர் ; யாகத்துக்குப் பலர் அழைக்கப்பட்டார்கள் ; தன் துணைவர்களோடு துரியோதனனும் வந்திருந்தான். யாக முடிவிலே, துரியோதனன், மயன்கட்டிய மாளிகையின் விசித்திரத்தைக் கண்டு போக விரும்பினுன் ; மாளிகையிலே நுழைந்தான். மயன்கட்டிய மாதிரியில்,

மாளிகைக்குள்ளே தரை, தடாகம்போலத் தோன்றியது. தடாகம், தரைபோலத் தோன்றியது. வாசல் இருக்குமிடத்து இல்லாதது போலவும், இல்லாத இடத்து இருப்பது போலவும் இலங்கியது. இந்த சூட்சமத்தை அறியாத துரியோதனன், சமநிலத்திலே துணிகளைத் தூக்கி நடந்தான்; தடாகத்திலே விழுந்து தத்தளித்தான். இதைக் கண்ட வீமன் சிரித்தான்—வயிறு குலுங்கச் சிரித்தான். திரௌபதி சும்மா இருப்பாளா? கல கல என்று, அவளும் சிரித்தாள். துரியோதனன் வெட்கிப் போய், வாசல் என்று விரைந்து சென்று, சுவரிலே மோதி முட்டிக் கொண்டான். இந்த வேடிக்கையைக் கண்ட வீமன் முதலியோர் விழுந்து விழுந்து சிரித்தார்கள். இந்த சிரிப்பால் பாண்டவர் அடைந்த துயரம் சிறிதன்று. நமக்குச் சிரிப்பு மற்றவர்க்கு வயிற்றெரிச்சல் அல்லவா? நமது பேச்சால், நகைப்பால் நாம் ஏன் பிறர் வெறுப்புக்கும் விரோதத்துக்கும் ஆளாக வேண்டும்?

**நாவடக்கம்**

நாவடக்கம் சச்சரவைச் சாந்தப்படுத்தும்; சண்டையையும் சமாதானப்படுத்தும். நாவடங்கிச், சொல்வதை நயமாகச் சொன்னால், கொடிய விரோதியும் கொண்ட கோபந் தணிவான். இராம கதையிலே, இராமனுக்கு இராவணன் எத்துணைக் கொடிய பகைவன்! போர்க்களத்திலே இராவணன் அடிபட்டு, ஆயுதத்தை இழந்து, வெட்கி, இராமன் முன் நிற்கிறான். சமயம் வாய்த்ததென்று இராமன் இராவணனை வதைக்கவில்லை; வையவுமில்லை. சொல்லுகிறான், அதுவும் இனிமையாகச் சொல்லுகிறான். ‘அப்பா, இராவணா! நீ மிகவும் பலசாலி; ஆயுதங்

களை இழந்து விட்டாய். இப்போதே உன்னை நான் கொன்றுவிடலாம். ஆனால், உன்னிடத்திலே எனக்கு விரோதம் ஒன்றும் இல்லை. சீதையை மட்டும் கொண்டுவந்து விட்டுவிடு. உன்னை ஒன்றும் செய்வ தில்லை. நிதானி. யோசி. நாளை வந்து நீ முடிவு சொல்; இன்று போ' என்று மிகவும் இனிமையாகப் பேசினன். அதனால், சீதையை விட்டுவிடுவோமா என்ற சஞ்சலம் இராவணன் மனத்திலும் எழுந்த தல்லவா?

## மௌனம்

விளையாட்டு வேடிக்கைகளிலும் வீண் வார்த்தை சண்டையாகவே முடிவதைப் பலமுறை கண்டிருக் கின்றோம். அதனால், உண்மையைத்தான் சொல்லு வது, அதுவும் இனிமையாய்ச் சொல்லுவது, அள வாய்ச் சொல்லுவது என்ற விரதத்தை ஒருவன் மேற் கொள்வான் ஆனால், வளவள என்றோ சளசள என்றோ அதிகப்பிரசங்கி ஆக, அவனுக்கு இடமே இராது. அரவம் ஆடேல் என்ற ஔவை மொழிப்படி அவன் நடந்து கொள்பவன் ஆவான். ஏன் வீண் பேச்சுப் பேசாதிருக்க வேண்டும் என்ற வினவுக்கு, ஔவை, 'மோனம் என்பது ஞான வரம்பு' என்று விடை அளிக்கிருள். உண்மை ஞானம் ஒருவனிடம் இருக்கு மானல், அதன் வெளியடையாளம் மௌனம். மௌனம் மனச் சஞ்சலம் அகற்றும்; அமைதி தரும்.

முனிவர்கள் மூன்று பேர் சுவர்க்கம் நோக்கிப் போய்க்கொண்டிருந்தார்கள்; மௌனமாய்ப் போய்க் கொண்டிருந்தார்கள். போகும் வழியிலே ஒரு பருந்து, பாம்பொன்றைத் தூக்கிப் போவதை அவர்கள் கண்டார்கள். அப்போது, முனிவருள் ஒருவர்,

'இது என்ன சங்கடம்! பாம்பு அநியாயமாய்ப் பருந்தின் வாயிலே அகப்பட்டுத் துடிக்கிறதே' என்று பரிதவித்தார். உடனே அவர் பூமியை நோக்கி விழுந்துவிட்டார். மற்ருெருவர், 'இந்தக் கொடிய பாம்பு இப்படித்தான் கொல்லப்பட வேண்டும்' என்று கூறினர். அவரும் கீழே விழுந்துவிட்டார். எஞ்சியவர், 'பிரபஞ்ச விசித்திரத்திலே இது நியாயம், இது அநியாயம் என்று எடுத்துக் கூற நமக்கு என்ன வலிமை இருக்கிறது? என்ன அதிகாரம் இருக்கிறது? அவன் அன்றி, ஓரணுவும் அசையாது. நடப்பவைகளைக் கண்டு மனங் கோணுது, செய்வன திருந்தச் செய்து பொறுமையுடன் இருத்தலே நமது கடமை' என்று எண்ணி, பாம்பின் நிலைக்குப் பரிவு கூர்தலுமின்றிப், பருந்தின் செயலை வெறுத்தலுமின்றி, மௌனமாய்த் தம் வழியே நடந்தார். சிரமம் இன்றி அவர் சுவர்க்கம் புகுந்தார்.

கடமையைச் செய்து, மௌனமாய்ப் பொறுமையுடன் இராது, வீண் விவாதம் தொடங்குதல் கூடாது. விளையாட்டு வினையாக முடியும். விக்கிரமாதித்தனை வேதாளம் கேட்டது: 'ஓரூரிலே ஒரு பெரிய பிரபு சமாராதனை செய்தார். அதற்குத் தயிர்க்காரிகள் தயிர் கொண்டுவந்தனர். வழியிலே பருந்து ஒரு பாம்பைப் பிடித்துப் போக, பாம்பு வேதனை பொறுக்காது விஷத்தைக் கக்கியது. விஷத்துளிகள் சிதறித் தயிர்ப் பானைகளில் விழுந்தன. தயிர்க்காரிகள் பிரபு வீட்டிலே தயிரைக் கொடுத்துப் போய்விட்டார்கள். பரிசாரகர் இதை எடுத்து, நீரை விட்டு மோராக்கி இலைகளிலே பரிமாறினர். சாப்பிட்டவர் அனைவரும், சற்று நேரத்திலே பிணமாகி விழுந்தனர். இந்தப் பாவம் யாரைச் சேரும்? பருந்தையா? பாம்பையா?

தயிர்க்காரியையா? பரிசாரகரையா? பிரபுவையா?' இதுதான் கேள்வி. விக்கிரமாதித்தன் சிறிது சிந்தித்தான்; அவன் புத்திசாலி அல்லவா? சொன்னான்: 'குற்றம் இன்னாருடையது என்று குறிப்பிட முடியாது. தரும சங்கடமான இந்த மாதிரி விஷயத்திலே கண்மூடித்தனமாகக் குற்றம் இன்னாருடையது என்று எவன் பிதற்றுகிறானோ அவனே பாவி' என்று முடிவு கூறினான். ஆதலின், நமக்கு விளங்காத உலக விசித்திரங்களிலே, இது நியாயம், இது அநியாயம் என்று அரவமாடாது—அதாவது, வீண் விவாதம் செய்யாது, எதை எப்போது எப்படிச் செய்யவேண்டுமோ, பேச வேண்டுமோ அதைச் செய்து, பேசி, நாவடங்கி, மௌனமாக நடப்பதே முறை.

1. சொல்லும் தொடரும்:

| | | |
|---|---|---|
| அனுபவ வாசகம் | பயனில பகரல் | கல கல |
| பிரபஞ்ச விசித்திரம் | இன்னாதன இயம்பல் | சள சள |
| அதிகப் பிரசங்கி | பொய் புகறல் | வள வள |
| கண் மூடித்தனம் | கோட்கூறல் | தருமசங்கடம் |

2. சிந்தனைக்கு:

1. யாகாவாராயினும் நாகாக்க; காவாக்கால்
சோகாப்பர் சொல் இழுக்குப் பட்டு.
பயனில் சொல் பாராட்டுவானை மகன் எனல்
மக்கட் பதடி எனல்.

உரை விளக்கம் எழுது.

2. உன் தோழனுடன் நீ தொடங்கிய வீண் விவாதம் எப்போதாவது மனத்தாபத்திலே முடிந்ததுண்டா?

3. இது நியாயம், இது அநியாயம் என்று ஒன்றை நாம் விவாதம் செய்வது தவறு?

# சென்னைக்கு

மாணவர்களே! இன்று நாம் (சென்னைப்) பட்டினத்தைச் சுற்றிப் பார்த்து வருவோம்; அதைப் பற்றி உங்கள் பாடத்திலே படித்தீர்களே; அந்த வாக்கியம் ஞாபகத்தில் இருக்கிறதா?

'இந்திய நாட்டிலே முந்திய நகரங்களில் ஒன்ருய், நாளுவருணரும் சேளுவீரரும் வாழும் மாட மாளிகை மாலை, துரைத்தனச்சாலை, நிரைத்த தன சாலை, வர்த்தக சாலை, நர்த்தனசாலை, சர்வகலாசாலை, தர்ம கலாசாலை, கலை பயில்சாலை, வைத்தியசாலை, வைதிகர் சாலை, சித்திரச் சாலை, கைத்தொழிற் சாலை, ஆயங் கொள் சாலை, நியாயங்கொள் சாலை—இன்னன சாலைகள் எண்ணிறந்தன பெற்று, நால்வகை அரணும் சூழ்வுற விளங்கும் பொன்னகரை ஒத்த சென்னைமா நகர்——'

இதைப் படித்தபோது, உங்களுக்கு ஒன்றுமே விளங்கவில்லை அல்லவா? நல்லது; இப்போது சென்னையைச் சுற்றிப் பார்ப்போம்.

### கோட்டையிலே

இந்தியாவிலேயே சென்னை மூன்ருவது பெரிய நகரம். பிரான்சிஸ் டே என்பவர் முந்நூறு வருடங் களுக்கு முன் இந்த நகரத்துக்கு நல்ல முகூர்த்தம் ஒன்றிலே அஸ்திவாரம் இட்டார். டே என்பவர் கிழக் கிந்தியக் கம்பெனியைச் சார்ந்த ஒரு வியாபாரி. சந்திரகிரி ராசன், கடற் கரையை அடுத்த ஓரிடத்தைக் காட்டி, அதிலே கட்டிடங்களைக் கட்டிக்கொள்ளும்படி,

கம்பெனியாரை அனுமதித்தான். ஆங்கில வர்த்தகர், அந்த இடத்திலே முதன் முதல் ஒரு கோட்டை கட்டினுர்கள். வர்த்தகப் பாதுகாப்புக்கென்று கட்டப்பட்ட அது, நாட்டை ஆண்டது. அந்த விபரீத சம்பவத்தை நீங்கள் சரித்திரத்திலே படிப்பீர்கள். இந்தக் கோட்டையை ஒட்டி நாளடைவிலே பெரிய நகரம் ஒன்று அமைந்தது. அதுதான் 'ஜார்ஜ் டவுன்'.

இப்போது, கோட்டையைச் சுற்றிப் பார்ப்போம்; சென்னை சர்க்காரின் முக்கிய அலுவலகம் இங்கேதான் அமைந்திருக்கின்றது. இங்கேதான் மந்திரிகள் காரியாலயங்களும் இருக்கின்றன. இந்த மண்டபத்தைப் பார்த்தீர்களா? சட்ட சபை இங்கேதான் கூடுகிறது. நமது நாட்டின் ஆட்சிக்குரிய சட்டங்கள் இங்கேதான் வகுக்கப்படுகின்றன. சட்ட சபை அனுமதியின்றி அரசியலார் வரி விதிக்க முடியாது; வசூலித்த வரியைச் செலவு செய்ய முடியாது. அதன் ஆதரவின்றி, மந்திரிகள் பதவி வகிக்க முடியாது. உத்தியோகத்தர் நடவடிக்கைகள் அதன் பரிசோதனைக்குட்படும். இவ்வாறு, சட்டசபையின் மூலமாகச் செலுத்தப்படும் பொது மக்கள் அதிகாரத்தைத்தான் சுதந்திரம், சுயராச்சியம் என்பது. சுருங்கச் சொன்னுல், இன்று நம்மை ஆள்வது இந்த சட்டசபைதான்; அது எப்படி என்று பின்னுலே விளக்குகின்றேன். சட்டசபை நடக்கும்போது ஒரு நாள் இங்கே வருவோம். அப்போது அதன் தலைவரை நாம் சந்திக்கலாம்; அதன் அங்கத்தினர்களையும் மந்திரிகளையும் பார்க்கலாம். நமது கல்வி மந்திரியை நீங்கள் அறிவீர்கள் அல்லவா? அவருடைய காரியாலயம்தான் இது. நமது முதல் மந்திரி யார்? சட்டசபைக்கு உங்கள் தாலுகாப் பிரதிநிதி யார்? அதோ தெரிகிறதே அந்த மாதா

கோயிலைப் பாருங்கள் ; இது பழமையான கோயில். அந்தக் கொடிமரத்திலே சுழன்று பறந்திடும் தாயின் மணிக்கொடியைப் பார்த்தீர்களா ? அதற்கு வணக்கம் செலுத்துங்கள்.

இந்தக் கோட்டை பலதரம் தாக்கப்பட்டது. பிரெஞ்சியர் இருமுறை இதை முற்றுகை இட்டனர். மராடர்கள் இதனைக் கைப்பற்ற முனைந்தார்கள். ஐதரலியும் இரண்டு மூன்று முறை இதைத் தாக்கினன். தென்னிந்தியாவிலே இந்தக் கோட்டை பிரசித்தி வாய்ந்தது ; தென்னிந்திய சரிதத்தை உருவாக்கியது. செயின்ட் ஜார்ஜ் கோட்டை என்பது இதன் பெயர்.

### ஜார்ஜ் டவுனிலே

இனி, ஜார்ஜ் டவுனுக்குச் செல்வோம். அதோ தெரிகிறதே, அதுதான் இந்த மாகாணத்தின் நீதி மன்றம். அதன் மீது, ஒரு கலங்கரை விளக்கு அமைந்திருக்கிறது. அது 160 அடி உயரம் உள்ளது. இருபது மைல் தொலைவு வரையிலும் அதன் ஒளி சுடர் வீசும். கடலிலே செல்லும் கப்பல்களுக்குக் கரை அருகிலே இருக்கிறது என்று இது அறிவுறுத்தும் ; இதன் மீது ஏறுவதற்கு நமக்கு நேரமில்லை. துறைமுகத்தையும் எட்டிப் பார்த்து அப்பால் செல்வோம். கூவம் நதியைப் பார்த்தோமே, அதன் நாற்றம் சகிக்கவில்லை அல்லவா ? இதுதான் சென்னையிலே சிறந்த நதி. சிறிய கட்டுமரங்கள் செல்லுதற்குத்தான் இது உதவும். ஆழ்ந்து அகன்ற ஆறு சென்னையிலே இல்லை ; பெரிய கப்பல்கள் நங்கூரம் பாய்ச்சி, பாதுகாப்பாக நிற்பதற்குச் சென்னையிலே வசதி இல்லை. ஆதலின், செயற்கைத் துறைமுகம் ஒன்று கட்டப்பட்டிருக்கிறது. துறைமுகத்துள்ளே அலை அடங்கி இருக்கும் ; பண்

டங்களைக் கப்பலிலே ஏற்றவும் இறக்கவும் பல்லாயிரர் பணி செய்கின்றனர். கொழும்பு, லண்டன் கல்கத்தா போன்ற மா நகரங்களுக்கும் மற்றும் பல இடங்களுக்கும் இங்கிருந்து கப்பல்கள் புறப்படும். துறைமுகத்திலே நுழைந்து சுற்றிப் பார்ப்பதற்கு அனுமதி வேண்டும்; அதைப் பெறுதற்கு அவகாசமில்லை; ஆதலால் மறுமுறை சாவகாசமாய் வந்து இதைப் பார்த்துக்கொள்ளலாம்.

மரினாவிலே

இந்த அகன்ற நெடும் பாதை கடற்கரையை ஒட்டி ஒடுகிறது. இங்கே—'ஜார்ஜ்டவுனி'லே தொடங்கி 'சான்தோம்' வரை அது செல்கின்றது. இதன் நீளம் சுமார் ஐந்து மைல். இதை 'மரினா' என்பார்கள். சென்னையின் சிறப்பெல்லாம் இதன் சிறப்பே என்றால், அது மிகையாகாது. உலகிலே இதைப்போன்ற மரினா வேறெங்கும் இல்லை என்கின்றார்கள். மாலை நேரங்களிலே நகரமக்கள் உல்லாசமாய் இங்கே உலாவ வருவார்கள். அப்போது, கடலிலிருந்து வீசுகிற மெல்லிய காற்று, பகலெல்லாம் தகிக்கிற வெப்பத்துக்கு எவ்வளவோ ஆறுதலாக இருக்கும். மற்ற இடங்களை எல்லாம் பார்த்துவிட்டு, நேரமிருந்தால் நாமும் இன்று மாலை திருவல்லிக்கேணிப் பக்கம், இந்த மரினாவுக்குச் செல்வோம்.

சென்னையிலே அழகிய கட்டிடங்கள் பல உண்டு. நாம் சேப்பாக்கம் அரண்மனையைப் பார்த்தோம். ஆர்க்காட் நவாபுகளுக்கு, அது, முன்னம் உரியதாக இருந்தது. அதனை அடுத்து, பல்கலைக் கழகத்தின் பெருமிதமான கட்டிடங்களையும், நூல் நிலையத்தையும் பார்த்தோம். சிந்தாதேவி (சரசுவதி)யின் செழுங்




**பார்த்தவை:** எழும்பூர் ; ‘சென்ட்ரல்’; நகர்மன்றம் ;
நீதிமன்றம் ; கோட்டை ; கூவம் பாலம் ;
பல்கலைக்கழகம் ; சேப்பாக் அரண்மனை ;
சான்தோம் மாதா கோயில் ; மயிலைச் சிவாலயம்.

கலை நியமம்தான் அது. பல்கலைக் கழகம் பி. ஏ.; எம். ஏ. போன்ற உயரிய பரீட்சைகளை நடத்துவது; பல்வேறு கல்வித் துறைகளிலும் மாணவர்க்குப் பயிற்சி தருவது.

### ரயில் நிலையங்களிலே

சென்னையிலே இரண்டு பெரிய ரயில் நிலையங்கள் உண்டு. ஒன்று, 'சென்டரல்' நிலையம். இங்கிருந்து பம்பாய், பங்களூர்களுக்கும், ஐதராபாத்துக்கும் ரயில் புறப்படுகிறது. நீலகிரிக்கும், மேல் கடல்கரைக்கும் ரயில் புறப்படுவதும் இங்கிருந்துதான். எழும்பூர் நிலையத்திலே தஞ்சாவூர், திருச்சிராப்பள்ளி, மதுரை, திருவனந்தபுரம், கொளும்பு முதலிய இடங்களுக்கு ரயில் ஏறலாம். நாலா திசைகளிலிருந்தும், கடல் வழியாகவும், ரயில் வழியாகவும், கார் வழியாகவும், விண் வழி விமானத்தின் மூலமும் நாள்தோறும் சென்னைக்கு ஆயிரக் கணக்கிலே பிரயாணிகள் வந்து போகின்றார்கள்.

சென்ட்ரல் ரயில் நிலையத்தைக் கடந்துவிட்டோம்; அதோ! அந்தப் பக்கம் போக நேரம் இல்லை; அங்கே அழகிய பூங்கா ஒன்றுண்டு; அதிலே பொய்கைகள், விளையாட்டிடம், மிருகக் காட்சிசாலை அமைந்திருக்கின்றன. இதுதான் பிரசித்திபெற்ற 'ரிப்பன் கட்டிடம்'. இங்கேதான் நகர மன்றம் கூடுகிறது. கண் கவர் வனப்புடன் இந்தக் கட்டிடம் திகழ்கின்றதல்லவா. அருகிலே இருப்பது ஒரு மார்க்கட் (—சந்தை). இதுதான் பிரபலமான மூர்மார்க்கெட். இதனுள் நுழைந்தால், மைலாப்பூருக்கு இன்று போக முடியாது. முடியு

மானல், திருவல்லிக்கேணிக்கும் சென்று திரும்ப வேண்டும் அல்லவா ?

மயிலையிலே

மயிலாப்பூரிலே உள்ள சிவாலயம் மிகவும் பழமையானது. மயிலாப்பூரிலே வணிகர் ஒருவர் இருந்தார்; அவர் சிவநேசர். செல்வத்தில் சிறந்தவர். அவருடைய மகள் பூம்பாவை; அவள், சிறுமி; ஒரு நாள் அவள் பொழிலிலே, பூக்கொய்யப் புகுந்த போது, பாம்பொன்று, மல்லிகைப் பந்தலிலே மறைந்து வந்து அவளைத் தீண்டிற்று. மணி மந்திர மருந்து முயற்சிகளாலும் ஏறிய விடம் இறங்கவே இல்லை. உடலை எரித்து எலும்பையும் சாம்பரையும் குடத்திலேயிட்டு, பொன்மணிகளால் அதனை அலங் கரித்து, கன்னி மாடத்திலே வைத்திருந்தார்கள். ஞான சம்பந்தர் மயிலாப்பூருக்கு வந்தபோது, கபாலீச்சுரத்துக்கு அந்தக் குடத்தைக் கொண்டுவரச் செய்து, அவர் பதிகம் பாடினர். அவர் இசையமுதம் எலும்பை உயிர்ப்பித்தது; குடம் உடைந்தது; பூம்பாவை உருப்பெற்றெழுந்தாளாம்.

‘ஊர்திரை வேலை உலாவும் உயர்மயிலைக்
கார்தருசோலைக் கபாலீச்சுரம்’

கபாலீச்சுரம் என்றது மயிலைச் சிவாலயத்தை. இதன் அருகே அல்லிக்கேணி ஒன்றுண்டு; அதன் மருங்கு பெருமாள் கோயில் கொண்டிருக்கிறர். அதனை ஆழ்வாரொருவர்,

‘நீளோதம், வந்தலைக்கும் மாமயிலை மாஅல்லிக்கேணி’

என்று பாடினர்.

### மாநகர்

சென்னையின் அங்கங்களாக விளங்கும் இவ்வூர்கள் மிகப் பழையவை. கம்பெனியார் கட்டிய கோட்டை வளர்ந்தோங்கி விரிந்தபோது, வணிக நலங் காரணமாக அதனைச் சூழ்ந்து பல பேட்டைகள் தோன்றின; சௌகார் பேட்டை, சிந்தாதிரிப் பேட்டை, தண்டையார் பேட்டை முதலிய அவற்றுள் சிறந்தவை. கீழ்ப்பாக்கம், சேப்பாக்கம், நுங்கம் பாக்கம் என்கிறார்களே—பாக்கம் என்பது கடற்கரைக் கிராமத்தை; பட்டினம் என்பதும் அதைத்தான். அகநாட்டூர் பட்டணம் எனப்படும். கோயில்கள், கோட்டை, பேட்டைகள், பாக்கங்கள்—அனைத்தும் ஒன்று சேர்ந்து, இன்று சென்னைமா நகரமாகத் திகழ்கின்றது.

### புறநகர்

சென்னையைச் சேர்ந்த அடையாறு, கிண்டி, பறங்கிமலை, பல்லாவரங்களும் பார்க்க வேண்டிய இடங்களே. சமீப காலத்திலே அடையாற்றில் ஐரோப்பியப் பெண்மணி ஒருவர் வசித்து வந்தார். அவர் பெயர் அன்னிபெசன்ட்; அவர் இந்தியர் பலராலும் கொண்டாடப்பட்டவர். இந்தியக் கலா சாரங்களிலே அவருக்குப் பற்றதிகம். தேர்ந்த புலமையும், தெளிந்த அறிவும் வாய்ந்தவர்.

கிண்டியிலே கவர்னர் மாளிகை ஒன்றிருக்கிறது. அப்பால், பறங்கிமலை. அது ஒரு சிறு குன்று; சுமார் 200 அடி உயரம் உள்ளது. அதன் உச்சியிலே ஒரு மாதா கோயில் உண்டு. இங்கே 2000 வருடத்துக்கு முந்திய ஓவியம் ஒன்றிருக்கிறதாம். தாமஸ் முனிவர் ஏசுநாதரின் சீடரல்லவா? தாமஸ் முனிவர்,

இந்த மாதாகோயிலுக்கருகே உள்ள மற்ளுெரு சிறு குன்றிலே கொல்லப்பட்டார் என்று சொல்லப்படு கிறது.

பல்லாவரம் இங்கிருந்து நாலே மைல்தான். அங்கே 500 அடி உயரமுள்ள சிறு குன்று ஒன் றுண்டு. அதன் உச்சியிலே பிரபலமான பள்ளி வாசல் ஒன்றிருக்கிறது. அதன் அருகே சில குடவரைக் கோயில்கள் இருக்கின்றன. 1200 வருடங் களுக்கு முன்னே குன்றுகளைக் குடைந்து செய்யப் பட்ட கோயில்கள் அவை.

சென்னைப் பிரயாணம் முடிந்தது; கண்டதைக் கேட்டதை நீங்கள் குறித்துக்கொண்டீர்கள் அல்லவா? நமது தலைநகர் எப்படி ?

1. சொல்லும் தொடரும் :

| | | |
|---|---|---|
| துரைத்தனம் | சட்டசபை | செழுங்கலை நியமம் |
| அலுவலகம் | நீதிமன்றம் | நகரமன்றம் |
| ஆயம் | கலங்கரை விளக்கு | கலாசாரம் |
| காரியாலயம் | துறைமுகம் | குடைவரைக் கோயில் |

2. சிந்தனைக்கு :

1. 'வர்த்தகப் பாதுகாப்புக் கென்று கட்டிய கோட்டை நாட்டை யாண்டது'—எப்படி ?

2. ஊர், குறிச்சி, பாக்கம், பட்டணம், பட்டினம், பேட்டை, பட்டி, கோட்டை—என்ன என்று சொல்லு.

3. ஜார்ஜ் டவுன், செயின்ட் ஜார்ஜ் கோட்டை, மூர் மார்க் கெட், சான்தோம், செயின்ட் தாமஸ் மௌன்ட்—இந்த இடங் களுக்கு ஏன் ஆங்கிலப் பெயர்கள் வழங்குகின்றன ? அவற்றுக்குத் தமிழ்ப் பெயரிடுவது சரியா ? நீங்கள் என்ன பெயர் இடுவீர்கள் ?

4. செப்பாக், டிரிப்லிகேன் என்று கேட்டோமே—இந்தச் சொற்களின் தமிழ் வடிவம் என்ன ? ஏன் அவை அப்படி உரு மாறி வழங்குகின்றன ? பார் பார்ஸ் பிரிட்ஜ் எது தெரியுமா ?

# குறிப்புரை

## தனிப்பாடல்

1. பழையனூர்க்காரிக்கு ஆடு வாங்கிக்கொடுக்க, வாதவன், வத்தவன், யாதவன் என்ற மூவரிடத்தும் போய், அவர்கள் கொடாதபடியினாலே, சேரமானிடத்துப் போய் ஔவை சொல்லிய வெண்பா.

2. புல்வேளூர்ப்பூதன் வரகரிசிச் சோறிட்டபோது ஔவை பாடியது.

வாட்டு - வாட்டற்கறி. புல்வேளூர், திருவண்ணுமலைத் தாலூகா பெண்ணை யாற்றங்கரையை அடுத்தது.

## 1. நீதிவெண்பா

ஆசிரியர் யார் என்பது அறியப்படவில்லை. சிறந்த நீதிகளை உணர்த்தும் வெண்பாக்களை யுடையது.

1. விடம் - விஷம்.

## 2. நல்வழி (ஔவை பாடியதென்பர்)

1. போவிப்பம் - போஷிப்போம்.

---



